


# யரில்லாத ஊரின் பகல்வேளை

இருட்டு தாரை தாரையாக இறங்கிக்கொண்டிருந்தது. ஆகாசத்துக்கும் நிலத்துக்குமான இடைவெளியை மூடி நிரப்ப முயன்று கொண்டிருந்தது இருள். வழியும் மரங்களும் வீடுகளும் கூட தலை மாற்றி வைக்கப்பட்டு விட்டனவா? ஆகாசத்தின் துகள்களாக மிதக்கும் நட்சத்திரங்கள் சரிந்து தரையிலிருந்து முளைத்திருக்கின்றதா? பாதை புலப்படாத இருட்டு. எல்லாப் பக்கத்திலும் நடமாட்டமற்ற வெளி இறுகிக்கொண்டு வந்தது. புதையுண்டிருந்த மரங்களில் நாடி ஒடுங்கி நின்றது காற்று. இருளின் எல்லாச் சுனைகளும் திறந்துகொண்டு இடைவிடாது சுரந்துகொண்டிருந்தன. முனங்கல்களும் பேச்சரவமுமில்லை. பறவையொன்றின் ரெக்கையொலி மட்டுமே சடசடக்கிறது. மண்புழு ஊர்ந்த தடம் போல நிலமெங்கும் பாதைகளைப் பிரிகின்றது. பூச்சிகள் இருளைக் குடித்தபடி மயங்கிக் கிடந்தன. தீர்க்க முடியாத வருடங்களின் தனிமை இருளாக நின்று ஊர் பார்த்துக்கொண்டிருந்தது. நடமாட்டத்தின் பேரில் அக்கறை யற்று உருவாகியிருந்தது எங்கும் இருட்டு.

பஸ்ஸிலிருந்து இறங்கி வழிப்பாதையில் நடக்கத் தொடங்கிய இருவருக்குமே இருளின் பிசுபிசுப்பு பயத்தையும் தனிமை யையும் பெருக்கியது. நடக்க நடக்க காடு விரியத் தொடங்கியது. உடன் நடந்தபோது அடுத்தவரின் முகம் தெரியவில்லை. வீசி நடக்கும் கைகளின் தீவிரத்தில் விலகிச் சரிகின்றது இருள். வானம் சரிந்து பூமியோடிருந்தது. இருவரும் பெருமூச்சு விட்ட படியே நடந்தார்கள். வெகு நெருக்கத்தில் ஆகாசம் தணிந் திருந்தது. வெக்கை உறைந்த நிலத்தில் நடை ஆயாசமாகவும் தன்மை புரியாமலுமிருந்தது. எங்கோ ஒடுங்கிய காற்று சீறத் துடிப்பது போல ஒரு சுழல் மூச்சின் சப்தம் கேட்பது. இருவரில்

எவரும் பேச வேண்டும் என்றோ, புகை பிடிக்கவோ கூட நாட்ட மில்லை. நடக்க நடக்க கரடு தட்டிய நிலமும், கரம்பை மணல் களுமான நிலப்பரப்பு விரிந்திருந்தது. பாறைகள் சில பூமியுள் புதையுண்டிருந்தன. நடந்து விலகும்போது காலில் எத்திய ஏதோ ஒரு பொருள் சிதறி ஓடியது. முன்னால் செல்பவன் அவனை விட்டு விலகிச் சென்ற பிறகும் பின்னாடி வந்தவன் விரல்களைக் கொஞ்ச நேரம் பார்த்தபடி நின்றான். காலில் எதுவும் தெரியவில்லை. பிரம்மாண்டத்தின் மீது வெளிச்சத்தைப் பரப்பத் தீப்பெட்டியி லிருந்து குச்சியொன்றைக் கிழித்தான். நெருப்பு ஓசை துல்லிய மாகக் கேட்டது. ஒரு நிமிடம் எல்லாமும் பிரகாசமாகி ஒளிர்ந்து நின்றது. மரங்களின் மூர்க்க ரூபமும், பாறைகளின் திமிறிய முகங்களும், கருத்த நிலமுமாக ஒளியில் தோன்றின. அடுத்த குச்சியைக் கிழித்துப் பார்த்தான். அவன் காலைப் பற்றியிருந்தது மாட்டின் தலை. எப்போதோ புதையுண்டுபோன மாட்டின் திறந்த வாய் எலும்புகள் சிதையத் தெரிந்தது. கண்கள் வெற்றிடமும் பலத்த கபாலமுமாக மாட்டின் தலை எலும்பு அரித்துக் கிடந்தது. முன்னால் போனவன் போய்க் கொண்டேயிருந்தான்.

எந்த நாளிலோ செத்துப்போன மாட்டுத் தலையின் தீவிரம் புதையுண்ட மண் எங்கும் நிறைந்திருந்தது. ஈரம் கசியும் மாட்டின் கண்களை ஞாபகப்படுத்தியது இருள். கபாலத்தைத் தூக்கி எறிந்தான். வழிப்பாதைகளில் மாடுகள் செத்துக் கிடப்பதைக் கண்டிருக்கிறான். சில உடைமரங்களில் மாட்டின் தொப்புள் கொடிகள் ஓலையில் சுற்றப்பட்டு நெடுங்காலம் இருப்பதைக் கூடக் கண்டிருக்கிறான். இறந்த மாட்டின் விலா எலும்புகள் நிலத்தினின்று மீறி வலையெனப் படர்ந்திருப்பதைப் பார்த்திருக் கிறான். மாட்டின் வெறுமையுற்ற கண்களே நிலப்பரப்பின் வாழ்வு.

முன்னால் நடந்துபோனவனுக்கும் பின்னவனுக்குமான தொடர்பு அறுந்துபோனது. வேகமாக நடக்கத் தொடங்கினான். மணல் பழுத்துப்போன வெளி நடக்க நடக்கப் புதையுண்டது. அருகில் நடைச் சப்தம் கேட்கத் தொடங்கிய பின்பே முன்னால் சென்றவன் நிதானமானவன். இருவரும் கடந்துபோனார்கள். இருட்டிலிருந்து அவன் குரல் கேட்டது.

''உனக்கு ஊர் ஏதாவது தெரியுதா?''

''கிழக்கே பாரு... வெளிச்சம் சரிந்து கிடக்குது.''

குரல் அடங்கி இருவரும் அவரவர் இயல்புப் போக்கின் வழியே மீண்டும் நடக்கத் தொடங்கினர். முன்னால் நடந்தவன் தனிமை தாங்காது அவனாகவே பேசிக்கொள்ளத் தொடங்கிவிட்டான். அவன் ஒருவனின் பேச்சே பலரது குரல் போல திசை குழம்பிக் கேட்கத் தொடங்கியது. பின்னால் வந்தவன் எதையும் சட்டை செய்யவில்லை. ஆள் அற்ற இடத்தில் நடந்துகொண்டிருக்கிறோம் என்பதே அவனுடைய ஒரே நினைவாக இருந்தது. வழி சில நேரம் அகன்றும், பல நேரம் மறைந்து வளைவதுமாகவே இருந்தது. தானாகப் புலம்பிக்கொண்டு வந்தவனின் குரல் அசட்டையாகவும், பல சமயம் எரிச்சலூட்டுவதாகவும் இருந்தது. குரல் கடந்து கொண்டே இருந்தது. உடைமரங்கள் தென்படத் தொடங்கின. பூவாடை. முன்னால் சென்றவன் பயத்தில் முனங்கினான். திடீரென அவன் குரல் உயர்ந்து கேட்டது.

''தீக்குச்சியைக் கொளுத்தேன்.''

தீக்குச்சியின் வெளிச்சம் பரவியபோதும் பிரகாசமான இடைவெளியை ஊதி அணைத்தது இருட்டு. திரும்பவும் அவனருகில் போய் தீக்குச்சியை உரசிக் காட்டியதும் அவன் முகத்தில் ரத்தக் கோடுகள் தெரிந்தன. நகத்தின் பிறாண்டல். அவன் விரல்களால் கன்னத்தை மூடிக்கொண்டான். முகம் இந்த வெளிச்சத்தில் விகாரமாகிறது. ரத்தத் துளிகள் தெரிந்தன. இன்னொரு குச்சியை உரசிப் பெற்று வெளியில் காட்டினான். சடசடப்பு ஒலியுடன் பறந்துகொண்டிருந்தது ஒரு பறவை. வௌவாலாகத்தான் இருக்க வேண்டும். அதுதான் முகத்தில் அடிக்கக் கூடியது. முனங்கியபடி நடந்தவன் கேட்டான்.

''ஊர் அருகில்தானிருக்க வேண்டும். வௌவால் அலைகின்றதே...''

''சொல்ல முடியாது. காட்டு வௌவாலாகவும் இருக்கக் கூடும்.''

வழி தன் போக்கில் ஊர்ந்துபோனது. இருவரும் அருகருகே நடந்து போனார்கள். முதுகிலிருந்த பை கனக்கத் தொடங்கியது. முடிவற்ற கனவில் செல்வது போலவே இருவருக்கும் தோன்றியது பின்னால் வந்தவன் கேட்டான்.

''அவர் வீட்டில் இருப்பார்தானே?''

''எங்கேயும் போக மாட்டார். எப்படியும் ஊரில்தான் இருக்க வேண்டும்.''

ஊர் வழி புலப்படத் தொடங்கியது. நாய்களின் ஓசை விட்டு விட்டுக் கேட்கத் தொடங்கியது. ஊர் மயங்கிக் கிடந்தது. உறக்கத்தின் ஊடே ஊரின் சொல்லவொண்ணா அழகும் வசீகரமும் வெளியெங்கும் ததும்பிக்கொண்டிருந்தன. எல்லா ஊரும் இரவில் வசீகரம் கொண்டு விடவே செய்கின்றன. நீரில் மூழ்கிக் கிடப்பது போலிருந்தது ஊர். சரிந்து பிரியும் பாதை வழியாக ஊர் முகப்பினுள் நடந்தனர். ஊரை வட்டமிட்டு இருந்தது சாம்பல் நிற வெளிச்சம். மனிதர்களின் நடமாட்டம் உள்ள ஊர்களுக்கு மட்டுமே அந்த வெளிச்சம் வருவதாகச் சொல்வார்கள். இரவில் எல்லோரும் உறங்கிவிடுவதால் எல்லோரின் கண்களிலும் பதுங்கிய வெளிச்சம் இரவில் பிரிந்து ஊரைச் சுற்றிக்கொண்டிருக்கும். அந்த வெளிச்சம் அகன்ற ஊர்கள் வெகு சமீபத்தில் அழிந்து போய்விடும் என்பார்கள்.

ஊர் எல்லாப்புறமும் திறந்து கிடந்தது. மங்கிய கூரைகள். தெளிவற்ற நாய்க் குரைப்பும், சிதறிய நட்சத்திரவொளியும், அடங்கிய வெம்மையுமாக இருந்த ஊரினுள் நடந்தனர். தெருவில் உறங்கிக்கொண்டிருந்தனர் ஜனங்கள். எல்லாமும் உறைந்துபோனது போல் இருந்தன. கல் திண்ணைகளில் படுத்துக் கிடந்த உருவங்கள் எல்லாமே ஒன்றைப் போலவே இருந்தன. தெருக்களில் நீண்ட சப்தமின்மை நிறைந்திருந்தது. கூரைகளின் கருத்த வைக்கோல்கள் காற்றில் அகப்பட்டு அலைக் கழிக்கப்பட்டுக் கொண்டிருந்தன. கயிற்றுக் கட்டில்களில் புதைந்த முகங்கள். சாம்பல் நிற வெளிச்சத்தில் வீடுகள் விநோதத் தோற்றம் கொள்கின்றன. ஈரப்பசையற்ற ஊர். புழுதி அடைந்த தெருக்கள். பெரிய பாறையொன்று ஊரின் நடுவில் கிடந்தது. அசையாத வேப்ப மரங்கள் வருபவர்களைப் பார்த்தபடி யிருந்தன. மடத்தைக் கடந்தபோது யார் குரலோ கேட்டது.

''யார் வீட்டுக்குப் போகணும்...''

''ரெங்கசாமி...''

''சிவப்புத் துண்டு ரெங்கசாமியா?''

அவர்கள் தலையாட்டினார்கள். மடத்தின் தூணில் சாய்ந்தவாறு கேள்வி கேட்ட நபர் அவர்களிடம் சொன்னான்.

''இப்படி... கிழக்கு வழியாப் போங்க. அடுத்த ஊர்... பக்கம் தான்... நேரம் என்ன இருக்கும்?''

''ரெண்டு மணிக்கும் மேலாயிருச்சு.''

பேச்சுக்குரல்கள் அடங்கிவிட்டன. அவர்கள் கிழக்கு வழியில் நடந்தனர். கட்டை கட்டையாக நின்ற வீட்டுச் சுவர்களைப் பார்த்தபடியே நடந்தனர். வெருகுப் பூனையொன்று எங்கோ அலைந்துவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்தது. இருவரும் நடந்த வழியைத் திரும்பிப் பார்த்தனர். பின்னாடி எதுவுமில்லை. அடுத்த ஊரை அவர்கள் வந்து அடைந்தபோது மணி மூன்றாகி விட்டது. பழங்கிராமம். எதுவும் சரிவரப் புலப்படாத தெருக்கள். வீடுகள் அதிகமில்லை. திசைக்கொன்றாக சிதறப்பட்டது போலக் கிடந்தன. நிசப்தம் தன் பூஜ்ய அளவை விடவும் கீழே போயிருந்தது. தெருவில் அவர்கள் இந்த இரவிலும் ஒரு பெண்ணின் நடமாட்டத்தைக் கண்டனர். அவள் இவர்கள் வருவதைப் பார்த்து நின்றுகொண்டிருந்தாள். கிட்டத்தில் வந்ததும் கேட்டாள்.

''யாரு...''

''ரெங்கசாமி வீடு எங்க இருக்கு?''

''அந்த ரெட்டைக் கதவு போட்ட வீடுதான்... தட்டுங்க.''

இருவரும் ஆசுவாசமுற்றார்கள். பெரிய கதவு. குமிழைப் பிடித்தபடி தட்டினார்கள்.

''ரெங்கசாமி... தோழர்...''

எழுந்துகொள்ளும் சப்தம் கேட்டது. கதவு திறந்துகொண்டது. ஒற்றைச் சேலையில் இடுங்கிய கண்களுடன் கர்ப்ப ஸ்திரி ஒருத்தி கதவைப் பிடித்தபடி கேட்டாள்.

''யாரு வேணும்?''

''ரெங்கசாமி.''

''பின்னாடி படுத்திருக்காக... அப்பிடி வாங்க...''

அவர்கள் பின் வாசலுக்குப் போவதற்குள் ஆள் எழுந்து கொள்ளும் சப்தம் கேட்டது. கயிற்றுக் கட்டிலினின்று எழுந்து ரங்கசாமி வந்தார். அவர்களின் முன்னே வந்த பின்புதான் ஆள் அடையாளம் தெரிந்தது. அந்தப் பெண் பின் கதவைத் திறந்துகொண்டு நின்றாள். ரங்கசாமி அவர்களை உட்காரச்

சொன்னார். வாசல்படியில் உட்கார்ந்துகொண்டனர். அவள் உள்ளே போய்க் கதவைப் பூட்டிவிட்டாள். ரெங்கசாமி ஒரு பீடியைப் பற்ற வைத்துக்கொண்டார். அவர் தலையணைக்கு அடியில் சூரிக்கத்தி தெரிந்தது. பீடிப் புகை சுழன்றது. அவர் பீடியை அணைத்துவிட்டுக் கேட்டார்.

''வழி கண்டுபிடிக்கக் கஷ்டமாயிருந்ததா...''

''இருட்டு. வழியே தெரியல. பாதையில இருந்து ரொம்ப உள்ளே இருக்கே.''

''வெளியே படுக்குறீங்களா, இல்ல வீட்டுக்குள்ள...''

''உள்ள வாணாம்.''

''இருங்க, வாரேன்'' - ரெங்கசாமி எழுந்து தெருவின் உள்ளே போனார். அவர்கள் பேசாமல் தலை கவிழ்ந்து உட்கார்ந்து கொண்டார்கள். ரங்கசாமி திரும்பி வந்து கூப்பிட்டார்.

''வாங்க, மாடியில படுக்கலாம்.''

அவர்கள் தெருவைக் கடந்து போனார்கள். பெரிய வீடு அது. கதவு திறந்தே கிடந்தது. இப்போதுதான் பெருக்கப்பட்ட தரையில் புழுதி அடங்கவில்லை. பெரிய மரப்படிகள்.

''எங்க வேணும்னாலும் படுத்துக்கோங்க. வீட்டில யாருமில்லை. காலியான வீடு. மேல போயி வேணும்னாலும் படுக்கலாம்'' - என்றார் ரெங்கசாமி.

இருவரும் கைலியைக் கட்டிக்கொண்டு மாடிக்குப் போனார்கள். குட்டையான மாடிச் சுவர். காரை பெயர்ந்த தளம். இருட்டு அங்கும் அலைந்துகொண்டிருந்தது. படுத்தபடியே அவர்களுடன் ரெங்கசாமி பேசிக்கொண்டிருந்தார். அவர் உறங்கத் தூங்கி விட்டனர். நிசப்தம் மெல்லப் பேச்சை வெகு ஆழத்தினுள் கொண்டு ஒளித்து வைத்தது. உறக்கமும் பிசுபிசுப்பாக அப்பிக் கொண்டது.

இருவர் முதுகிலும் வெயில் ஊர்ந்துகொண்டிருந்தது. காரைக் குவியலின் ஊடே படுத்து உறங்கிக்கொண்டிருந்தனர். வெயில் ஏறியிருந்தது. எங்கும் பேச்சரவம். நடமாட்ட ஒலி. புழுதி பறக்கும் தெருவில் காற்று சுழன்றுகொண்டிருந்தது. ரங்கசாமி மாடியில் ஏறி அவர்களை எழுப்பினார். மரங்களின் மீது ஏறிய

வெயில் வெற்றுக் கிளைகளைத் தடவிச் சென்று கொண்டிருந்தது.

''அப்பு... சங்கரு.. எந்த்ரிங்க... வெயில் வந்துருச்சே...''

புரண்டு படுத்தனர். சமையல் புகை பரவத் தொடங்கியிருந்தது. கடுகின் வாசம். கண்ணைத் திறக்க முடியவில்லை. முகத்துக்கு எதிராகச் சூரியன். வெக்கை, வெடித்துச் சிதறியது போல வெளிச்சம். சங்கர், காரைகள் அப்பிய முதுகைத் தட்டிவிட்டான். அப்புவுக்கு உடலெங்கும் அசதியாக இருந்தது. தலை சிலுப்பிக் கொண்டிருந்தது. எழுந்து நின்றனர். ஊரே வெளிச்சமாக இருந்தது. கூரை வீடுகளும் காரை வீடுகளுமாகச் சொற்ப வீடுகளே இருந்தன. ஊரின் புதிர்த்தன்மை எல்லாவற்றின் மீதும் படர்ந்துபோயிருந்தது. ரெங்கசாமி தோளில் சிவப்புத் துண்டு போட்டிருந்தார். அவரோடு கீழே இறங்கி வந்த பிறகுதான் அந்த வீட்டைப் பார்த்தார்கள். யாருமற்ற வீடு, நிறைய ஜன்னல்கள், சுவர் பிளவுண்டு போயிருந்தது. சுவரில் கண்ணாடி பதித்திருந்தார்கள். ரெங்கசாமி அவர்களிடம் சொன்னார்.

''ஊரக் காலி பண்ணிப் போகும்போது விட்டுட்டுப் போயிட்டாங்க. பெரிய்ய வீடு.''

பின்கட்டு சரிந்துபோய் செடி கொடிகள் முளைத்துப் போயிருந்தன. ஆள் வசித்த அடையாளம் அழிந்துபோயிருந்தது.

மூவரும் தெருவுக்கு வந்தபோது நாய்கள் வெறித்துக் குரைத்தன. அயல் ஆட்களைக் கண்டறியாத நாய்கள் அவை. தெருவில் புழுதி சுழன்றுகொண்டிருந்தது. ஆடு, மாடுகளின் சப்தமும் அமுங்கிப்போயிருந்தது. வழியெங்கும் நிசப்தம். சிறுவர்களின் முகங்கள் கூடத் தென்படவில்லை. கல் உரல் பழுத்துக் கிடந்தது. மங்கிய வெளிச்சம் பதுங்கிய வீடுகள். மரங்கள் அசைவற்று நின்றிருந்தன. நாள்பட்ட மரங்களாயிருக்க வேண்டும். பட்டைகள் வெடித்துப் பிளந்திருந்தன. அதிகம் ஆள் முகமே தெரியாத ஊராக இருந்தது.

ரெங்கசாமியின் வீடு பகலில் உருமாறியிருந்தது. உள்ளே நல்ல வெளிச்சம். அகன்ற ஜன்னல் கதவுகள். உள்ளே போய் உட்கார்ந்துகொண்டார்கள். நெல் குலுக்கைகள் அடைந்த அறையில் நெல் மணம் கசிந்துகொண்டிருந்தது. நாள்பட்ட நெல்லின் வாடை, வீட்டின் குணாம்சத்துக்குப் பொருந்தாது

தொங்கிக்கொண்டிருந்தது. பிடல் காஸ்ட்ரோவின் படம். அதனருகில் இளம் வயதில் செத்துப்போன தமிழ் எழுத்தாளனின் புகைப்படம். செம்படை அணிவகுப்பு ஓவியம். பரண், அலமாரியெங்கும் மாஸ்கோ வெளியிட்ட புத்தகங்கள்.

அந்த அறை இரண்டாக, கண்ணுக்குப் புலப்படாத நூலால் பிரிக்கப்பட்டிருந்தது போல இருந்தது. அலமாரியின் அருகிலிருந்து சமையலறை வரை ஒரு பகுதியாகவும், மற்றவை இன்னொரு புறமாகவும் தெரிந்தது. அலமாரியில் சம்பந்தமற்ற காகிதங்கள். பத்திரிகைகள் கிடந்தன. சமையலறையில் இருந்து பெண்ணின் உலகம் தன் வஸ்துகளான சேலைகள், துணிகள், பாத்திரங்கள் எனத் தனித்துப் பிரிந்திருந்தது. காஸ்ட்ரோ இரண்டு உலகுக்கும் நடுவில் இருந்தார். சங்கர் வீட்டின் சுவர்களைப் பார்த்தபடியே இருந்தான். அப்புவும், ரெங்கசாமியும் வெளியே எழுந்து போய் விட்டார்கள். புகை வீடெங்கும் சுழன்றுகொண்டி ருந்தது. இரவில் பார்த்த அந்த கர்ப்ப ஸ்திரி ரங்கசாமியின் மனைவியாக இருக்கக் கூடும். அவள் புகையின் ஊடே யிருந்தாள். வயிறு முன் சரிந்துபோயிருந்தது. முகம் பருத்து பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள். அவளால் நேராக உட்கார முடியவில்லை. காலை மடக்கியபடி சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். வெளிறிய பாதங்கள். புகை நின்றதும் அவள் முகம் தெரிந்தது. களைத்து ஓய்ந்த முகம். அசதியும் பலவீனமுமான கண்களை அவனால் நேராகப் பார்க்க இயலவில்லை. அடிபட்ட பறவையின் மூடிய இமைகளை ஞாபகமூட்டும் கண்கள். ஈரம் கசிந்து ததும்புகின்றன. அவள் எழுந்து பின் வாசலுக்குப் போய் உட்கார்ந்துகொண்டாள். உள்ளே வேறு யாரோ ஒரு பெண் வந்தாள். சங்கரிடம் கேட்டாள்.

''எங்க அவுக...''

''வெளியே... உட்கார்ந்து இருக்காங்க.''

பின் வழியில் கடந்து போன பின்பு, அந்த அறையில் யாருமற்றுப் போய் சங்கர் மட்டுமே மிஞ்சினான். எழுந்து அலமாரியில் பீடித் துண்டுகளைத் தேடினான். அடுப்பில் குனிந்து பற்ற வைக்கும் போது சாம்பல் பறந்தது. மாஸ்கோ புத்தக வரிசைகளைப் பார்த்தபடி பீடி குடித்தான். எல்லா புத்தகத்தின் முகப்பிலும் அடையாளமிருந்தது.

அப்புவும், ரெங்கசாமியும் மடைக்கரைக்கு வந்தார்கள். இலைகள் உதிர்ந்த மேடொன்றில் ரெங்கசாமி படுத்துக்கொண்டார். வறண்ட கிணறு குருவியின் அலைக்கழிப்பிலிருந்தது. அப்பு எதிரில் உட்கார்ந்துகொண்டான். மரங்களின் பழுத்த இலைகளின் ஊடே முணுமுணுத்தன பறவைகள். ரெங்கசாமி அப்புவிடம் கேட்டார்.

''என்ன ஆச்சு? இப்பிடி ராத்திரியில கிளம்பி வந்திட்டீங்க?''

''நேத்து மறியல்ல, அடிதடி... ஒரு காக்கி குல்லா காலி... யாருன்னு தெரியல. என் காலடியில கிடந்தது உடம்பு. வயசாளி. எல்லா இடத்திலேயும் தேடுறாங்க. நம்ம ஆள்கதான் யாரோ செஞ்சுட்டாங்க. தப்ப வேற இடமில்ல... அதான்...''

''வந்தது யாரு?''

''பாதுகாப்புத் துறை அமைச்சர்... கறுப்புக் கொடி காட்டினோம்.''

அவர்கள் பேசாமலிருந்தார்கள். ஒரு இலை காற்றில் மிதந்து மிதந்து போய்க்கொண்டிருந்தது. அப்பு ரெங்கசாமியிடம் கேட்டான்.

''ஊர் ஏன் இப்படியிருக்கு?''

''அழியிற ஊரு அதான்... ஆள் எண்ணிக்கை குறைஞ்சுபோச்சு. இப்ப நாற்பத்தியேழு பேர்தான் ஊர்ல இருக்கோம்.''

''மத்தவங்க...''

''எல்லாத்தையும் விட்டுட்டுப் போயாச்சு. இங்க என்ன இருக்கு சொல்லு.''

''இப்ப இருக்கறவங்களும் போயிருவாங்களா?''

''வேற வழி... வீடுகள் காலியான ஊரிது. வெக்கை ஜனிக்கும் பூமி. எங்காவது பூனைக்குட்டி இருக்கறத பாத்தியா. அதுகள் கூட கலைஞ்சுபோக ஆரம்பிச்சிருச்சு. ஆட்களோட பழகின நாய்களும், ஒன்றிரண்டு ஆடு, மாடுகளும்தானிருக்கு.''

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது கழுதையொன்றின் கொடூரச் சப்தம் கேட்டது. அது நெடுநேரம் காற்றில் அதிர்வை ஏற்படுத்திவிட்டது. துயரம் படிந்த அந்தக் குரலை அவர்கள்

கேட்டபடி இருந்தனர். சப்தம் அடங்கி ஓய்ந்த பின்பு ரெங்கசாமி சொன்னார்.

''வண்ணாப் பயக விட்டுப்போன கழுதை... தானா கிடந்து சாகப் போகுது.''

காற்று இலைகளை வாரிச் சுழன்றது. கால் மணல்களைப் பறித்தது காற்று. அப்பு அவரிடம் கேட்டான்.

''நீங்க குடும்பத்தோட வந்திரப் போறீங்களா?''

''நகரம்தான் வேலைகளுக்கு வசதிப்படும். இங்க தகவல் எதுவும் தெரிய மாட்டேங்குது. உலக அரசியல் நிலைமை தெரியலே. என் கேஸ் என்னாச்சு?''

''இன்னும் விசாரணையிருக்கு. இப்பக்கூட ரெண்டு பேரைப் பிடிச்சுட்டுப் போயிட்டாங்க.''

''உங்களையும் தேடுறாங்களா?''

''தேடுறாங்க.''

அவர்கள் பேச்சு நின்றுபோனது. கொக்குக் கூட்டமொன்று கடந்து போனது. ரெங்கசாமி அவர்களிடம் கேட்டார்.

''புஸ்தகம் எதுவும் கொண்டு வந்தீங்களா?''

''இருக்கு. சமீபமா நாம் போட்ட நோட்டீஸ், அறிக்கைகள் இருக்கு. இந்தப் பக்கம் நம்ம ஆட்கள் உண்டா?''

''ரெண்டு பேர் உண்டு. நாளைக்குப் போகலாம். இங்கிட்டும் தொப்பிக்காரன் தொல்லை உண்டுதான்.''

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது ஒற்றைக் கொக்கு ஒன்று பறந்து வந்து கரையில் அமர்ந்தது. இருவரும் அதைப் பார்த்தபடி யிருந்தனர். கொக்கு இருவரையும் சட்டை செய்யாது நின்றது. கொக்கின் மீதும் புழுதி படர்ந்தே இருந்தது. ரெங்கசாமி அதிசயம் போல அவனிடம் சொன்னார்.

''ரொம்ப நாள் ஆச்சு. கொக்கு பாத்து. இந்தப் பக்கம் வரவே வராது. தெக்க போற கொக்கு மாதிரியிருக்கு. மூச்சு வாங்குது பாரு.''

கழுத்தைச் சிலுப்பிக்கொண்டிருந்தது கொக்கு. சங்கர் அவர்களைப் பார்த்து வந்துகொண்டிருந்தான். அவன் வந்தபோதும் அவர்கள் கொக்கிலிருந்து பார்வையை விலக்கவில்லை. சட்டென ஒரு கணத்தில் பறக்கத் தொடங்கியது. மிதப்பது போலப் பறந்தது. அவர்கள் மறையும்வரை கொக்கினைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். காலை மெல்ல மறைந்து கொண்டிருந்தது. இயக்கமின்மை கொண்டிருந்தது. இயக்கமின்மை எல்லாப் பொருள்களையும் தொற்றிக்கொண்டு நிறைந்தது.

ஊரிலிருந்து பிரிந்தே போக முடியாத ஒருவன் அந்த ஊரிலிருந்து வந்தான். அவன் பகல் முழுவதும் வாசலை ஒட்டிய திண்ணையில் உட்கார்ந்தபடி வெயிலின் நகர்வைப் பார்த்தபடி இருப்பான். வயது அதிகம் என்றபோதும் அவன் உயரம் கொள்ளவில்லை. சுருங்கிய முகம். பகலெல்லாம் அவனுடைய பாதங்களை வெறித்துப் பார்த்தபடி இருப்பான். மிகப் பெரிய பாதங்கள். விநோதத் தோற்றத்துடன் யானையின் பாதங்களை ஞாபகமூட்டும் பெரிய பாதம். அகன்று படர்ந்த விரல்கள். காட்டுக் கிழங்கைப் போலத் தோன்றின. உடலோடு பொருந்தாத பாதங்கள் அவை. அவன் வெளியில் நடப்பதில்லை. சில அடி தூரம் தவிர அவனால் நடக்கவே முடியாது. எப்போதாவது அவன் தெருவில் நடக்கும்போது அவனுடைய பாதச் சுவடு படர்ந்து விரிந்திருப்பதை குழந்தைகள் பயத்தோடும் ஆர்வத்தோடும் பார்த்துப் போவார்கள். அகன்ற பாதம் தனக்கு ஏன் வந்தது என யோசித்தபடியே இருப்பான். இரவிலும் அவன் உறக்கம் கொள்வதில்லை.

தொடர்பற்ற எதையாவது யோசித்தபடி இருப்பான். பெண்களைப் பார்த்துக்கொண்டிருப்பதென்றால் அவனுக்கு விருப்பமுண்டு. உடலின் பல இடங்களிலும் அவன் பச்சை குத்தியிருப்பான். கைகளில், தொடைகளில் பெண் உரு அழியாமல் பச்சை குத்தப்பட்டிருக்கும். பெண்களைப் பார்ப்பது அவனுக்கு வேதனை தருவதாகவும் இருந்தது. இரவில் அவன் உரக்கக் கத்தி அழும்போது நாய்கள் கூட மௌனித்துக் கேட்டபடியிருக்கும். நெடுநேரம் வரை அவன் அழுதுகொண்டே இருப்பான். சில நாட்கள் தெருவின் நடுவில் கைகளை மார்பின் குறுக்கே கட்டிக்கொண்டு மிரட்சியோடிய கண்களுடன் நட்சத்திரங்களை எண்ணிக்கொண்டிருப்பான். தான் செத்துவிட்டதாகக் கூக்குரலிடுகிறான். கண்களை மூடி, தெருவில் கிடக்கும் அவனை யாரும் சட்டை செய்வதில்லை.

அவனுக்கு விந்தையான கனவுகள் வரும். அதைப் பற்றி அவனே அவனுடன் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருப்பான். வெகு சமீபமாக அவனையறியாது ஒரு பயம் அவனை அழுத்திக் கொண்டிருந்தது. ஊரில் ஆட்கள் குறைந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை உணரத் தொடங்கினான். எல்லோரும் போய்விட்டால் ஊர் என்னவாகும்? பட்டினியில் சாக நேருமா? உடல் வெடித்து விடுமா? அவன் குழம்பிப்போயிருந்தான். உலகத்திலேயே மனிதர்கள் குறைந்துகொண்டு வருகிறார்கள் என யோசிக்கத் தொடங்கினான். விந்தையான கனவால் அலைக்கழிக்கப் பட்டான்.

மிகப் பெரிய கறுப்பு மூடியிட்ட கப்பல் ஒன்றின், ஒளி புகா உள்புறத்தில் மனிதர்கள் எல்லோரும் ஏற்றப்பட்டு அடைக்கப் பட்டிருந்தனர். கடலில் கப்பல் மிதக்கின்றது. எங்கும் மனித முகங்கள். பெண்களும் குழந்தைகளும் கண்களைத் திறக்கவே யில்லை. ஒவ்வொரு நாளும் மனிதர்களின் உடலிலிருந்து செடி கொடிகள் முளைக்கத் தொடங்குகின்றன. எல்லோரின் காது மடல்களும் இலைகளாக மாறி அசைகின்றன. விருட்சம் போலப் பிளவுபடுகின்றன உடல்கள். கப்பலின் வெளிப்புறத்தில் வெக்கை மஞ்சள் பாகைப் போல் உருகி, கடலின் பரப்பை நிறைக்கின்றது. கடலே மஞ்சள் அலைகளை வீசுகின்றது. பறவையின் முகம் கொண்ட ஒருவன் கப்பலின் திரையைக் கிழித்துக் கடலில் குதிக்கின்றான். கடலில் இலைகள் அசைகின்றன. தாங்க முடியாத துயரமான கனவுகள் இதுபோல் அவனைப் பிடித்துள்ளன.

எல்லாமே நிஜம் என நம்பத் தொடங்கினான். தன்னுடைய காது மடல்கள் கூட இலைகளாகத் தோன்றிவிடுமோ என்று கூடப் பயந்தான். அவனை யாரும் முகம்கொண்டு பார்ப்பது கூட இல்லை. எப்படியாயினும் அவனோடு ஏழு மாதங்களுக்கு மேல் ஒரு சமயம் ஒரு பெண் உடன் வசித்திருக்கிறாள். அவள் யாரையும் உடன் அழைத்து வராமல் தானாகவே இந்த ஊருக்கு வந்தவள். பெரிய பாதக்காரனின் வீட்டில் தங்கிக்கொண்டாள். அவள் உயரமாகவும், நிறமாகவுமிருப்பாள். அவள் சதா ஓரிடத்தில் நிற்காது அலைந்துகொண்டிருப்பாள். பெரிய பாதக்காரனுடன் பேசும்போது மட்டும் எரிந்து விழுவாள்.

அவள் ஊரிலிருந்த பலரோடு உறவு கொள்கிறாள் என அவன் தினமும் ஏசுவான். அவள் எதையும் கேட்டுக்கொள்வதில்லை.

அவள் இரவில் தன் உடலைக் காட்டியபடி கிடக்கும்போது அவன் மூர்க்கம் கொள்வான். அவள் எப்போதாவது அவனுக்காக எதையாவது திங்க கொண்டு வருவாள். அந்தப் பெண் மழைக்காலத்தின் இரவில் சில சமயம் அவனை அணைத்துக் கொண்டு படுத்துக்கொள்வாள். மழையின் இடைவிடாத சத்தத்தால் அவன் சந்தோஷம் கொள்வான். மழைக்காலம் முடிந்த பின்பு அவள் சொல்லிக்கொள்ளாமலே போய்விட்டாள். அவள் போன அன்று தன் பாதங்களை இழுத்துக்கொண்டு அவன் தெருவிலிட்ட கூச்சல் எல்லோருக்கும் துக்கத்தைத் தந்தது. அதன் பிறகு எந்தப் பெண்ணும் அவனுடன் பேசுவதுமில்லை. மழைக்காலமும் அதன் பிந்திய காலங்களில் அருகிப்போனது.

சமீபமாக அவனைத் துன்புறுத்திக்கொண்டிருப்பது கழுதையின் குரல். அது அவனின் தனிமையை ஞாபகப்படுத்திக்கொண்டே இருந்தது. வர வர அது கத்தும்போது அவனால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. ஊரில் திரியும் அயல் முகங்களையும் அவனால் சகிக்க முடியவில்லை. நேற்று பகலில் வண்ணானின் இடிந்த வீடுகளைக் கடந்து கழுதை தெருவுக்கே வந்துவிட்டது. அறுபட்ட மூக்கோடு செம்மை படர்ந்திருந்தது. கழுதையின் முகம். பெட்டைக் கழுதையது. விலா எலும்புகள் துருத்திக்கொண்டிருந்தன.

அது குட்டியாக இருந்து துள்ளி அலைந்த காலம் அவனுடைய ஞாபகத்திலிருந்தது. செம்பட்டை முடியோடு சுவர்களை உரசித் திரிந்த கழுதைக் குட்டியது. சிறுவர்களுக்குப் போக்குக் காட்டி ஓடும். பின் காலத்தில் அது பருத்த வயிறோடு தெருவில் நிழல் தேடி அலைந்து வீட்டின் முகப்புச் சுவரில் ஒண்டிக்கொண்டிருப்பதையும் கண்டிருக்கிறான். கேட்பார் அற்ற கழுதைகள் ஊரின் அழிவைச் சொல்லித் திரியக் கூடியவை. வண்ணாக்குடி அழிந்த ஊரில் ஜனங்கள் வசிக்க முடியாது எனப் பெண்கள் அழுதார்கள்.

இரண்டு நாள்களாகப் பெரிய பாதக்காரன் வீட்டை விட்டே வராமலிருந்தான். அவன் வீட்டினுள் தவளை ஒன்று சுற்றித் திரிந்தபடி இருந்ததைப் பார்த்தபடியிருந்தான். மூடிய கதவுகளின் வழியாகவும் வெயில் உள்ளே வந்துகொண்டிருந்தது. அவன் வீடு ரெங்கசாமியின் வீட்டின் எதிரில் இருந்தது. ரெங்கசாமியும் அப்புவும் சங்கரும் வெளியில் புறப்பட்டபோது மூடிய

கதவினைக் கடந்து போனார்கள். ரெங்கசாமி சுவரோரமாக இருந்த பெரிய பாதச் சுவடைப் பார்த்தபடிக் கடந்து போனார்.

மூவரும் ஊரின் வெளியில் நடந்து போகத் தொடங்கினர். பகல் மங்கியிருந்தது. காட்டுப் பாதைகள் வளைந்து கிடந்தன. வெம்பரப்பின் மீது தாழப் பறந்துகொண்டிருந்தது பருந்து. தாயும் மகளுமாக இரண்டு பெண்கள் அவர்கள் முன்னால் சென்று கொண்டிருந்தார்கள். வீசி நடக்கும் கைகள். பாதையின் நீட்சி முடிவு கொள்ளவில்லை. தெற்கில் நீண்ட பாதையில் அவர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். தூரத்தில் விளிம்பு தெரிய அடங்கியிருந்தது மலைப்பட்டி. சர்ச் கோபுரம் தவிர வேறு உயரம் அதிகம் தெரியாத ஊரது. காட்டு வழியில் ஆள்தடம் நிறைந்துபோயிருந்தது. உடைந்த கோயிலில் மூளிக் கைகளும், அறுபட்ட முலைகளுமாகத் தேவதைகள் காடு பார்த்துக் கொண்டிருந்தன. வெறிச்சோடிய நிலம். பாம்புகள் ஊர்ந்து சட்டையைக் கழற்றிக்கொண்ட புதர்கள் சலனமின்றி உள்ளன. ரெட்டைக் கண் பூச்சிகள் புதர்ச்செடி நிழலில் ஒதுங்கி நின்று கண்களை உருட்டுகின்றன. மலைப்பட்டிக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது வெயில் ஏறியிருந்தது.

சிவப்பு ஓட்டு வீடுகள் நிறைந்த ஊர். மூங்கில் தட்டி அடித்த வீடுகளுமிருந்தன. கிறிஸ்துவப் பாதிரி வீட்டின் முன்பு கல்வாழை மரம் தெரிந்தது. அவர்கள் தெருவினுள் நடந்துபோயினர். பெரிய குன்றி முத்து மரம், இலைகள் சலசலக்க நின்றிருந்தது. வீட்டின் அபூர்வ நிறங்கள் காலம் மாறாமலிருந்தன. வரிசை வரிசையாக ஜன்னல்களைக் கடந்துபோயினர். மங்கிய நிழலில் மனிதர்கள். மரப்படிகள் தெரிந்த வீடுகள். பாதி மூடிய கதவை விலக்கி உள்ளே போயினர். திறந்த உள் முற்றத்தில் வெயில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. வேப்பம் பூவின் வாடை நிறைந்த வீடு. ஆள் நடமாட்டம் தெரிந்தது. ரெங்கசாமி கூப்பிட்டார்.

''தாஸ் அண்ணே...''

நிழல் நீண்டு வெளியே வந்தது. தாஸ் மேல்சட்டையில்லாமல் கறுத்த உடலுடன் வெளியே வந்தார். பார்த்தவுடன் சிரிப்பு. அப்பு வீட்டின் உள்ளே தெரியும் முகங்களைப் பார்த்துக்கொண்டி ருந்தான். இரண்டு சிறுமிகள் வெறித்துக்கொண்டிருந்தார்கள். ரெங்கசாமி தாஸிடம் சொன்னார்.

•

''டவுன்ல இருந்து வந்திருக்காங்க. உங்களைப் பார்க்கணும் னாங்க. கூட்டிட்டு வந்தேன்.''

''வாங்க மேல போவம்.''

பெரிய படிக்கட்டுகள். பாத்திரங்கள் கவிழ்த்தி வைக்கப் பட்டிருப்பதை விலக்கி மேலே ஏறிப் போனார்கள். கூரையிட்ட மாடி. மூவரும் சுவரில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டார்கள். தாஸ் எதிரில் உட்கார்ந்துகொண்டார். தானியங்கள் உலரப் போட்ட தரை. கீழிருந்து பேச்சுக் குரல் கேட்டது. தாஸிடம் ரெங்கசாமி சொன்னார்.

''ராத்திரிதான் வந்தாங்க. சின்ன கேஸ் ஒண்ணு. அதான் இங்கயிருக்கலாம்னு...''

அப்பு பதில் சொன்னான்.

''கஷ்டம்தான். எதுவும் செய்ய முடியாது.''

அவர்கள் உலக அரசியல் நிலைமைகள் பற்றிப் பேசத் தொடங் கினார்கள். சங்கர் ஆட்டுக் குட்டிகள் கத்துவதிலே கவனம் கொள்ளத் தொடங்கினான். பல நாடுகளைக் கடந்து போய்க் கொண்டிருந்தது அவர்களின் பேச்சு. சம்பந்தமின்றி சங்கர் கல்லூரியின் விடுதியில் இருந்ததைப் பற்றி யோசித்துக் கொண்டி ருந்தான். விடாத மழை நாள் ஒன்றின் ஞாபகம் எழுந்தது. மைதானமெங்கும் மழை பெய்துகொண்டிருந்தது. விளையாடும் பையன்கள் போய்விட்டார்கள். பரந்த மைதானத்தில் பெய்து கொண்டிருந்த மழையை வேடிக்கை பார்த்துக்கொண்டி ருந்தார்கள் பையன்கள். ஈரம் இறங்கிய கட்டடங்கள். அவன் அறையிலிருந்து பார்த்தபடியே இருந்தான். மழையின் வாடை எங்கும் நிரம்பியது. அறையெங்கும் புத்தகங்கள் கவிழ்ந்து கிடந்தன. காலி சிகரெட் பெட்டிகள். சிகரெட் பிடித்தபடி மழையைப் பார்த்துக்கொண்டிருந்தான். புகை மழையில் கரைந்தது. சிகரெட்டை ஓடும் தண்ணீரில் தூக்கிப் போட்டான். மிதந்து போய்க்கொண்டிருந்த சிகரெட் துண்டு வசீகரத்தைத் தந்தது. மழை வெறித்த மைதானத்தில் இரண்டு காவலர்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் நிதானமும், சாவகாசமும் மழையை ஒத்தேயிருந்தன. யாரிடமோ விசாரித்தபடி வந்தார்கள். அவர்கள் சங்கரின் அறைக்கு வந்து சேர்ந்தபோது நனைந்திருந்தார்கள். கரகரத்த குரலில் அவனோடு பேசினார்கள்.

அறை முழுவதையும் அவர்கள் பார்த்தனர். அவர்களுக்குள் பேசியபடி சிகரெட் பற்ற வைத்துக்கொண்டனர். போகும்போது அவனிடம் சொன்னார்கள்.

''காலைல பத்து மணிக்கு ஸ்டேஷனுக்கு வா'' முதல் தடவையாக அவன் சிவப்புக் காவல் அறைக்கு அப்போதுதான் போனான். மூவரும் பேச்சை நிறுத்திவிட்டார்கள். அப்பு உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னான்.

''நான் நிச்சயம் காஸ்ட்ரோவை நம்பறேன். அது தோற்காது'' எவரிடமிருந்தும் பதில் வரவில்லை. நிசப்தம் நிறைந்தது. தாஸ் குறுக்கிட்டுச் சொன்னார்.

''டீ குடிக்கலாமா?''

அப்பு சங்கரையே பார்த்துக்கொண்டிருந்தான். சங்கர் கண்களை மூடியபடி சரிந்து உட்கார்ந்திருந்தான். அப்பு அவன் தோளில் கைகளை வைத்துக்கொண்டான். தாஸ் கீழே இறங்கிப் போனார். அவர் வரும்போது துணியில் பிடித்த சொம்பில் டீ வந்தது. வெயில் நன்றாக முற்றியிருந்தது. சேவல் எங்கோ கொக்கரித்துக் கொண்டிருந்தது. டீயின் உஷ்ணம் கதகதப்பாக இறங்கியது. காற்று குறைந்த தெரு. அவர்கள் பேச்சுக் குரல். ஆளுக்கொரு பக்கமாகப் படுத்துக் கொண்டார்கள். அப்பு நிறைய நோட்டீஸ்களை எடுத்து தாஸிடம் கொடுத்தான். அதன்பின்பு அவர்கள் பேசிக் கொள்ளவில்லை. தாஸ் ரெங்கசாமியிடம் சொன்னார்.

''இருங்க, சாப்பிட்டுப் போகலாம். நானும் வர்றேன்.'' மதிய வெயிலைப் பார்த்து காகங்கள் கரைந்துகொண்டிருந்தன.

வெளியிலிருந்து பெண் குரல் கேட்டது. உள்ளிருந்து பூவண்ணம் எழுந்துகொள்ள முயன்றாள். கால் சூகை கண்டிருந்தது. உள்ளே வரும்படி சப்தமிட்டாள். உள்ளே வந்த பெண் அடுப்படிச் சுவரைப் பிடித்தபடியே கேட்டாள்.

''ரெங்கசாமி மாமா இல்லையா?''

''மலைப்பட்டிக்குப் போயிருக்காரு.''

''கூடப் போறவங்க யாரு, உங்க சொந்தமா?''

''அவுக கட்சிக்காரங்க. டவுன்ல இருந்து வந்திருக்காங்க.''

அவர்கள் போனபிறகு பூவண்ணம் படுத்துக்கொண்டு விட்டாள். உதடு உலர்ந்துபோயிருந்தது. தலை மயிர் கலைய வியர்த்திருந்தாள். அவளுக்கு எதுவுமே பிடிப்பதில்லை. வீட்டிலிருந்த புஸ்தகங்கள், தாடி வைத்த படங்கள், காகிதங்கள். ஏன் மைக் கூடைக் கூட அவளுக்குப் பிடிக்கவில்லை. அதிலும் பச்சை நிறக் கண்கள் கொண்ட அந்தத் தாடி முகமும் உள்ள ஃபோட்டோ, அவளால் தாங்க முடியாததாக இருந்தது. எந்த நேரமும் அந்தக் கண்கள் தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதாகப் பட்டது. சதா இந்தத் தாடி வைத்த முகங்களின் புஸ்தகங்களைப் படிப்பதால் என்னவாகிவிடப் போகிறது? ஊரே காலியாகிப் போகும் நாளில் நாம் எங்கே செல்வது? யோசனைகள் வலைகளாகப் பிரிந்து சுழன்றன. ஒரே ஒரு தடவை அவளை நகரத்துக்கு அழைத்துக் கொண்டு போயிருக்கிறார் ரெங்கசாமி.

அதுவும் கட்சி அலுவலகத்தின் அறையில் தங்க வேண்டியதாகியது. எங்கும் தட்டி பேனர்கள். சிவப்பு மசியால் எழுதப்பட்ட வாசகங்கள். பாயில் உறங்கிக் கொண்டிருந்தார்கள் இளவட்டப் பையன்கள். அழுக்கடைந்த ஜிப்பாக்கள் தொங்கிக் கொண்டிருந்தன. கழுவப்படாத சமையல் பாத்திரங்கள் நிறைந்து கிடந்தன. சிதறிய பிரஷ் கட்டைகள். பகல் முழுவதும் அங்கேயே உட்கார்ந்து இருந்தாள். பேசியபடியே இருந்தார்கள். காகிதங்களைப் பரப்பிக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். பார்த்த முகம் போலத் தோன்றும் உருவப் படங்கள் சுவரில் தொங்கிக்கொண்டிருந்தன. கசப்பான டீயை அவளும் குடிக்க வேண்டியிருந்தது. அந்த அறை, அவர்கள், காகிதங்கள் எதுவும் பிடிக்கவில்லை. மெல்லிய குரலில் பின்பு பேசிக்கொள்ளத் தொடங்கி, பின்பு வெளியேறிப் போய்விட்டனர். அவள் மட்டுமே தனித்து இருந்தாள். கோபமும் அழுகையுமாக வந்தது.

மாலையில் வெளியிலிருந்து ரெங்கசாமியும் இன்னொருவனும் வந்தார்கள். வந்தவன் பதற்றமாக ரெங்கசாமியிடம் சொன்னான்.

''எல்லோரையும் பிடிச்சுட்டுப் போயிட்டாங்க.''

''அப்ப இங்கயும் வருவாங்களா?''

''நிச்சயம் வருவாங்க.''

அவளைக் கூட்டிக்கொண்டு அறையிலிருந்து வெளியேறினார்கள். எங்கே போகிறார்கள் என்றே புரியவில்லை.

பரபரப்பும் சந்தடியுமான தெருக்கள். வாகனங்களின் இரைச்சல். குப்பைகள் நிறைந்த வீதி. எல்லாப் பக்கமும் சப்தம் விரட்டுகின்றது. அழுக்கடைந்த பிச்சைக்காரர்கள் இலைக் குப்பைகளின் ஊடே பழங்களைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். நடக்கவே அசூயையாக மாறிய வீதி. வளைந்த தெருமுனைகள். புறாக்களின் கோயில் பொந்துகளைப் போல வீடுகள். ஜன்னல்கள் அற்ற அறைகள். நீர்க் குழாய்கள். கூரை வீடுகள். சாக்கடை உடைந்த முன்வாசல். மரங்களற்ற நகரம். கருத்த தண்டவாளங்களைக் கடந்து போனார்கள். பரபரப்பான வியாபார ஸ்தலத்தின் முக்கிய தெரு வந்தது. வீடுகள் எனச் சொல்ல முடியாத, சரிவான இருப்பிடங்கள். புகை படிந்த தகரங்கள். வெறித்த சிறுவர்கள். விலகிக் கடந்து குறுகலான வழியினுள் போய் முடிந்த மாடிப்படி ஒன்றின் கீழே பூட்டியிருந்த கதவைத் தட்டினார்கள். கண்ணாடி அணிந்த ஆள் ஒருவன் கதவைத் திறந்தான். அவனோடு ரெங்கசாமி எதுவோ பேசினார். அவன் அறையை விட்டு வெளியேறிப் போனான். மாடிப் படியின் கீழ்ப் பகுதி அது. அதை அறையாக மாற்றியிருக் கிறார்கள். தாழ்ந்த ஜன்னல். இரண்டு பேர் படுத்துக்கொள்ளும் இடம். நெருக்கமான சுவர்கள். அவனை உள்ளே இருக்கச் சொல்லிவிட்டு ரெங்கசாமி வெளியே போனார். திரும்பி உள்ளே வந்து கதவைப் பூட்டிக்கொள்ளச் சொல்லிவிட்டு அவர் போன பின்பும் அவள் உட்கார்ந்தே இருந்தாள். கதவைச் சாத்தியதும் அறை சுருங்கிக்கொண்டது. எந்தப் பக்கமும் வழியற்ற சதுரச் சுவர்கள் இறுக்கின. அவள் கவிழ்ந்து ஜன்னல் வழியாக, கடந்து போகும் கால்கள் தெரிந்தபடி இருந்தன. வேகமாகக் கடக்கும் கால்களைப் பார்த்தபடியே இருந்தாள்.

விதவிதமான கால்களின் நகர்வு. வெளியே பார்த்துக்கொண்டி ருக்க முடியவில்லை. பசிக்கத் தொடங்கியது. அறையில் தண்ணீர் இருக்கிறதா எனத் தேடினாள். பழுப்படைந்த வேஷ்டிகள் தொங்கிக்கொண்டிருந்தன. மாலை ஓய்ந்து இரவு வந்தது. உடல் ஆயாசம் எடுத்தது. அப்படியே படுத்து உறங்கிப் போனாள். விழித்தபோது இருட்டினுள் தான் மிதந்து கொண்டிருப்பது போலிருந்தது. விளக்கு எங்கிருக்கின்றது எனத் தெரியவில்லை. சுவர்கள் இறுகி எழுந்திருந்தன. வழி தெரிய வில்லை. கைகளால் சுவரைத் தடவினாள். விளக்கைப் போட்டதும் வெளிறிய மஞ்சள் வெளிச்சம் அறையெங்கும் நிரம்பியது. எல்லாப் பொருட்களும் வேறு நிறம் கொண்டன.

சுவர்களில் பதுங்கிய இரவுப் பூச்சிகள் சப்தமிடத் தொடங்கின. நெடுநேரம் உட்கார்ந்தே இருந்தாள். கால்களின் நடமாட்டம் அற்ற இரவு. பின்னிரவுக்குப் பிறகு வெளியே தட்டும் குரல் கேட்டது. ரெங்கசாமி சாப்பாடு பொட்டலங்களோடு வந்திருந் தான். இவ்வளவு வேகமாகவும், பரபரப்பாகவும் எப்போதும் சாப்பிட்டதில்லை. அவள் கண்ணாடி பாட்டிலில் அவன் கொண்டு வந்திருந்த தண்ணீரைக் குடித்தாள். அவன் புகை பிடித்துக் கொண்டிருந்தான்.

''நாளைக்கும் இங்க வேலையிருக்கு. இங்கேதானிருக்கணும்'' என்றான். அவள் சாப்பிட்டுவிட்டு சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவன் எதுவும் பேசாமல் படுத்துக் கொண்டிருந்தான். நெடு நேரத்துக்குப் பிறகு அவளும் படுத்துக் கொண்டாள். அவளின் மூச்சுக் காற்று அவன் மீது படர்ந்தது. அவளைக் கட்டிக்கொண்டான். உடல்கள் இயங்கிச் சரிந்தன. அறையெங்கும் உடல் வாடை நிறைந்தது. விடிந்து நீண்ட நேரமாகியும் மறுநாள் அவள் உறங்கியபடியே இருந்தான். இரண்டு நாளின் இரவும் பகலும் அப்படியே கழிந்தன. மூன்றாம் நாளின் பகலில் அவளின் அறைக் கதவைத் தட்டிய இருவர் அவளிடம் சொன்னார்கள்.

''ஊருக்குக் கிளம்புங்க. அவசரம்.''

''அவுக எங்க.''

''நாளைக்கு வருவாங்க. நாங்க கூட வந்து விட்டுட்டு வாறோம்.''

அவளுக்கு எதுவும் புரியவில்லை. வெளியே புறப்பட்ட பின்பு அவளைத் தனியே நடக்கவிட்டு பின்னாடியே வந்தார்கள். அவர்கள் எதையும் பேசிக்கொள்ளவில்லை. பஸ் புறப்பட்ட பின்பு அவளே கேட்டாள்.

''அவரையும் பிடிச்சுட்டாங்களா?''

அவர்கள் வெளியே பார்த்தபடி வந்தார்கள். ஊர்ப்பாதையில் அவளை இறக்கிவிட்டுத் திரும்பிப் போனார்கள். மூன்று மாதங் களுக்குப் பிறகு, அவன் வீடு வந்து சேர்ந்தான். உருக்குலைந்த முகமும் உடலுமாக அவன் வீட்டிலே இருந்தான். இப்போது யோசிக்கும்போதும், கால்கள் கடந்தபடியிருக்கும் தனி அறையின் பயத்தை மறக்கவே முடியவில்லை அவளால்.

வீட்டினுள் நடமாடுவது போலச் சப்தம் கேட்டது. பின் வாசலில் இருந்து எட்டிப் பார்த்தாள். அணில்கள் வீட்டினுள் அலைந்து கொண்டிருந்தன. அவள் எழுந்து வந்தாள். தாடிக்காரக் கிழவனின் கண்கள் அவளையே பார்த்துக்கொண்டிருந்தன. வெளியே யாரோ கத்தினார்கள். வாசலுக்கு வந்தபோது கேட்டாள்.

''கழுதைய யாரோ கொன்னு போட்டாங்க.''

செத்துக் கிடந்த கழுதையைச் சுற்றிப் பெண்களும், ஒன்றிரண்டு சிறுமிகளும் நின்றிருந்தார்கள். வயசாளி ஒருவர் சிதைந்த அதன் மூக்கைப் பார்த்தபடி நின்றார். அவர்கள் பார்த்துக்கொண்டி ருக்கும்போது வெடித்து அழும் ஆணின் குரல் கேட்டது. எல்லோரும் சப்தம் வந்த வீட்டைத் திரும்பிப் பார்த்தனர். பெரிய பாதக்காரனின் வீட்டிலிருந்து அந்தக் குரல் வந்தது. துயரமான அந்தக் குரலை அவளால் கேட்டுக் கொண்டிருக்க முடிய வில்லை. தொண்டையை அடைத்தது. வெளியில் ஆட்கள் கலைந்து போகத் தொடங்கினார்கள். வயசாளி யாரிடமோ சொன்னார்.

''கிறுக்குப் பய இதுக்குப் போயி அழறான் பாரு'' அவனின் விசும்பும் குரல் அடங்க அன்று மாலையானது.

சாப்பிட்ட பின்பு தாஸூம் மற்றவர்களும் படுத்து உறங்கத் தொடங்கினர். சங்கருக்கு மதியத்தில் உறக்கம் கொள்வதில்லை. சிகரெட் பிடிக்கலாமா என நினைத்தான். கீழே இறங்கி வந்தபோது வெறிச்சோடி இருந்தன தெருக்கள். தெருவின் அலாதியில் நடந்து சென்றான். கோழிகள் நிழலில் அலைந்து கொண்டிருந்தன. சாத்திய வீடுகளின் உள்ளே பேச்சரவம். மாட்டுத் தொழுவங்கள் காலியாகி இருந்தன மேற்கில் ஒடுங்கிய தெருவில் கடை இருந்தது. வீட்டின் ஒரு பகுதியைக் கடையாக்கி இருந்தார்கள். கடையில் ஒரு சிறுமி உட்கார்ந்திருந்தாள். சிகரெட் காலிப் பெட்டிகள் அடுக்கப் பட்டிருந்தன. சிகரெட் வாங்கிக்கொண்டு, கடையின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு நிதானமாகப் புகைபிடிக்கத் தொடங்கினான். அந்தச் சிறுமி அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். இயேசு நாதரைச் சிலுவையில் அறையக் கூட்டிப்போவது போல் ஒரு படம் தொங்கிக் கொண்டிருந்தது கடையின் உள்புறத்தில். அந்தச் சிறுமி உள்ளே எழுந்து போய்விட்டாள்.

இரண்டு நாளின் முந்திய மதியத்துக்கும், இன்றைக்கும் உள்ள இடைவெளியை, நிதானத்தைப் பற்றி யோசிக்கத்

தொடங்கினான். நிதானத்தின் வெகு ஆழத்தில் இப்போது புதையுண்டு நிற்பது போலிருந்தது. இரண்டு நாளின் முந்தைய மதியமோ, பரபரப்பும் வேகமுமானதாக இருந்தது. பாதுகாப்பு அமைச்சர் வருவதற்கான வரவேற்பு வளைவுகள் நிறைய எழுந்திருந்தன. அவர்களும் கூட்டத்தோடு நின்றிருந்தார்கள். கார் தூரத்தில் நின்றுவிட்டது. சந்தேகிக்கும் கண்களைக் கடந்தவாறே சென்ற காவலர்களுக்குப் பின்பு, திடீரென அவர்கள் சப்தமிட்டனர். எல்லாமும் சில நிமிடங்கள் தொடர்ந்தது. பின்பு யார் மீது முதலடி விழுந்தது எனத் தெரியவில்லை. சிதறி ஓடத் தொடங்கினார்கள்.

இதுவரை ஒழுங்கில் இருந்த தெரு முறுக்கிக்கொண்டது போலாகியது. ஓட ஓட, தெரு வெட்டுப்பட்டுச் சரிவது போலவும், எழுந்து அடைத்துக்கொள்வது போலவுமாகியது. வீடுகள் தலைகீழாக மாறின. வெற்றிடங்கள் மட்டுமே தொடர்ந்து கண்ணுக்குத் தெரிந்து வந்தன. எதன் மீதோ மோதி ஓடுவதாக இருந்தான். சந்துகள் திடீரென நீட்சி கொண்டுவிட்டது போலாகியது. எல்லாப் பொருள்களுமே அமானுஷ்ய அளவில் ஆகிப் போயின. அவன் ஓட்டம் திடீரென நின்றது. பின்னால் எந்தச் சப்தமும் கேட்கவில்லை. எல்லாமும் ஒழுங்குக்கு வந்தன. இயல்பாகக் கடந்து போனார்கள் ஜனங்கள். சுவர்கள் நேராக நின்றன. யாரை இடித்துத் தள்ளி வந்தோம் என ஞாபகம் வந்தது. காய்கறிகளுடன் வந்த நடுத்தர வயது முகம். அவன் அப்பாவை ஞாபகப்படுத்திய முகம். எதிரிலிருந்த டீக்கடையில் கேட்ட பழைய பாடல் இப்போதுதான் முதல் தடவையாகக் கேட்பது போல ஆசுவாசப்படுத்தியது. டீக்கடையினுள் போய் உட்கார்ந்து கொண்டான். கால் தசைகள் இன்னமும் ஆடிக்கொண்டிருந்தன. நடுக்கம் உடல் முழுவதும் தொற்றிக்கொண்டது. டீக் கோப்பை களிலிருந்து, எல்லாப் பொருள்களையும் முதல்முறையாகப் பார்ப்பது போலவே இருந்தது. என்ன பேச வேண்டும் என்பது கூட மறந்தது போலிருந்தது. அவனைப் பார்த்ததுமே டீக்கடைக் காரன் டீ போட்டுத் தந்தான்.

எங்கே போவது என நினைத்தபடியே டீ குடித்தான். அக்கா வீட்டுக்குப் போகலாம். எப்போதோ போனது. புறநகர் செல்லும் பஸ்ஸில் ஏறி அவள் வீட்டுக்குப் போனபோது உற்சாகமாக சிறுவர்கள் பந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவன் நின்று சிறிது நேரம் அதைப் பார்த்தபடியே இருந்தான். அக்கா வீடு தனித்திருந்தது. அவன் வீட்டினுள் போனபோது அவள்

படித்துக்கொண்டிருந்தாள். அவன் வந்ததைக் கண்டுகொள்ளவே இல்லை. பிள்ளைகள் விளையாண்டுகொண்டு இருந்தன. அவளின் முகச்சாடை அப்பாவைப் போலவே இருந்தது. அவனைப் பார்க்காமலே சொன்னாள்.

''உன்னை இங்க வரக் கூடாதுன்னு சொன்னேனே.''

அவன் கேட்டுக்கொண்டிருந்தான். அவளே தொடர்ந்து சொன்னாள்.

''நீ வர்றது அவருக்குப் பிடிக்கலே. உன்னைத் தேடிக்கிட்டு வர்றவங்க அவரப் பிடிச்சுட்டுப் போகப் போறாங்க. பின்ன நாங்க தெருவில நிப்போம். உனக்கு நிம்மதிதானே. முன்ன கூட அவர் ஆபிஸ்ல வந்து ரெண்டு பேர் உன் பேரைச் சொல்லி விசாரிச்சிட்டுப் போனாங்களாம். ஏண்டா இப்படி செய்றே?''

படிப்பதை நிறுத்திவிட்டு அவள் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்துப் பிள்ளைகள் உள்ளே வந்து நின்றன. அவனுடைய மாமா வந்தபோது அவன் படிக்கட்டில் உட்கார்ந்து இருந்தான். அவர் வந்ததும் மாலை பேப்பரை அவளிடத்தில் தூக்கி எறிந்துவிட்டு உள்ளே போனார். அதைப் பார்த்ததும் அவள் உரக்க அழத் தொடங்கினாள். அவன் பேப்பரை வாங்கிப் பார்த்தான். தொப்பி விலகிக் கிடக்க இறந்து கிடக்கும் போலீஸ் உடல். அவன் யாரையும் திரும்பிப் பார்க்காமல் படித்து முடித்தான். அக்கா எழுந்து உள்ளே போய்விட்டாள். அவர்களின் இடைவிடாத பேச்சு உள்ளே தொடங்கியது. எழுந்து அவன் நடக்கத் தொடங்கினான். எவ்வளவு நேரம் நடந்தான் எனத் தெரியாது நடந்தான். கட்சி அலுவலகத்துக்கு வந்தபோது அது காலியாக இருந்தது. பெரிய பேனரைச் சுருட்டிப் போட்டுப் படுத்துக்கொண்டான். படுத்த உடனே உறக்கம் வந்துவிட்டது. காலையில் அப்புவின் குரல்தான் அவனை எழுப்பியது.

சிகரெட் அணைந்துவிடவே ஞாபகத்திலிருந்து மீண்டு, வேறு ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டான். இந்த நிதானம் இனிமேல் கிடைக்குமா என்பது தெரியாமலிருந்தது. அவன் புகை பிடித்தபடியே தாஸ் வீட்டுக்குத் திரும்பியபோது அவர்கள் உறங்கிக்கொண்டுதான் இருந்தார்கள்.

எல்லோரும் போன பின்பு, பகலில் பெரிய பாதக்காரன் விசும்புவதைக் கொஞ்சம் நிறுத்தினான். தன்னை வேடிக்கை

பார்க்க நினைக்கும் சிறுமிகளை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அதை விடவும் கர்ப்ப ஸ்திரிகளைப் பார்க்க முடியவில்லை. எதற்கு இந்த ஊருக்குப் புதிய உயிர்? அதுவும் அந்தப் பெண்களின் சோகை படர்ந்த முகங்களும், பலவீனமும். அவன் யாரையும் பார்க்காமல் வெளியே எங்காவது போய் விடலாமா என நினைக்கவும் செய்தான்.

வீட்டில் அலைந்துகொண்டிருந்த தவளை சுவரினுள் போய்ப் பதுங்கிய அன்று அவனும் தவளையாவதாகக் கனவு கண்டான். தவளையைப் போல மாறிய பின்பும் தவளைகளின் உலகம் அவனைச் சேர்த்துக்கொள்ளவில்லை. தவளைகளுக்குள் ஏராளமான போட்டிகளும், சூதும், ரகசியமுமிருந்தன. அவனை அவை துரத்தி வீழ்த்தின. அவன் பருத்த தவளைக் கண்களால் அழுதான். கனவு கலைந்தது. தவளையைப் போலத் தாவியாவது ஊரைக் கடந்து போய்விட வேண்டும் போல் இருந்தது. ஊரின் வெளிப்புறம் எப்படியிருக்கும்? வர வர பகலின் தனிமையை அவனால் தாங்கவே முடியவில்லை. கழுதையின் சப்தம் அடங்கியதால் பெரும் நிசப்தம் எங்கும் கவிழ்ந்திருந்தது.

பெரிய பாதக்காரன் சிறுவனாக இருந்தபோது வீட்டில் அலைந்த கோழிக் குஞ்சுகளை நினைவு கொண்டான். அந்தக் குஞ்சுகள் என்னவாகி இருக்கும். பெரிய கோழியாகி, செத்து, மறைந்திருக் கும். கோழிக் குஞ்சுகள் இரையெடுத்தபடி அலைந்த சப்தம் இப்போதும் சுழலைப் போல எழுகின்றது. வீட்டில் அந்த நாளில் இருந்த பெண்களின் பேச்சு கூட கோழிக் குஞ்சின் குரலைப் போலவே இருந்தது. முருங்கை பூக்கும் காலங்களில் அவர்கள் பனியில் அலைவார்கள். எல்லோரின் நிழல்களும் ஊரைவிட்டுப் பிரிந்துவிட்டன.

யாரும் தன்னை விட்டுப் போய்விடாததாக அவன் யோசித்தான். அங்கேயே அவனுக்குத் தெரியாமல் அவர்கள் பேசிக்கொண்டும், உறங்கிக்கொண்டும் இருப்பதாக உணர்ந்தான். பல்லிகளைப் போல வீட்டின் உத்திரங்களில் அவர்களும் ஒளிந்திருக்கக் கூடும்.

என்ன சுயசமாதானம் செய்தபோதும் வேதனையும், துக்கமும் அவனிடமிருந்து பெருகியபடியே இருந்தன. திடீரென யாருமற்றுப்போன தனிமையில் மழைக்காலத்தை எப்படிச் சந்திப்பது எனத் தோன்றும். பயங்கரக் கனவின் நிஜ உரு போல அந்தக் காட்சியை நினைக்கவே முடியவில்லை. காரைகள் உதிர

அவன் விசும்பியபடி இருந்தான். மாலையில் அவன் விசும்பல் சப்தம் நின்றது. காற்று பலமாகச் சுழன்று அடித்தது. இலைகள் எங்கும் பறந்தன. அவன் திரும்பவும் வீட்டைப் பூட்டிக் கொண்டான். முடிச்சுகளாக வீங்கிப் பருத்த தன் பாதங்களைப் பார்த்தபடியிருந்தான். மாலை முடியும் நேரமாகியபோது பெரிய பாதக்காரன் வீட்டு ஜன்னலைக் கண்ட சிறுமி ஒருத்தி பயந்து கத்திப் போனாள். நிர்வாணித்த உடலோடு பாதங்கள் அகன்று தொங்கிக்கொண்டிருந்தான். ஆட்கள் சுலபமாகக் கதவைத் திறந்துவிட்டார்கள். வடிவமற்ற உடலுடன் அந்த முகத்தை, நிர்வாணத்தை எவராலும் தாங்க முடியவில்லை. குமட்டிக் கொண்டு வந்தது. மரணத்தின் கறையோடு மாலை நீண்டு கொண்டிருந்தது.

தாஸூம் சங்கரும் முன்னால் நடந்து வந்தார்கள். அப்பு ரெங்க சாமியிடம் பேசிக்கொண்டு வந்தான். மலைப்பட்டியை விட்டு விலகி அவர்கள் ரெங்கசாமியின் ஊர்ப்பாதையில் நடந்தனர். கரம்பை மணல் படர்ந்த மேடொன்றின் மீது உட்கார்ந்து கொண்டார்கள். சூரியன் மறைந்த பின்பும் வெக்கையும், வெளிச்சமும் நீடித்தன. தாஸிடம் அப்பு தன் டைரியிலிருந்த புகைப்படமொன்றைக் காட்டினான். வயதான முகம். அப்பு அந்தப் புகைப்படத்தைக் காட்டிவிட்டு, அச்சிடப்பட்ட காகிதம் ஒன்றை எடுத்துத் தந்தான். தாஸ் படித்துவிட்டுக் கேட்டார்.

''கான்சலோதானே... விடுதலை பண்ணிட்டாங்களா?''

''இல்லை... அதிகாரம் அவருக்குத் தந்தது தூக்கு. நல்ல கவிஞர். நாம அவர் கவிதையை வெளியிட்டு இருக்கோம். சங்கர்தான் மொழிபெயர்த்தான். ஞாபகமிருந்தா ஒரு கவிதை சொல்லேன் சங்கர்.''

அவன் பேசாமலிருந்தான். காற்று மணலை வாரிக்கொண்டு சுழன்றது. அப்புவே தொடர்ந்து பேசினான்.

''கான்சலோவை விடுதலை பண்ணச் சொல்லிப் பெரிய போராட்டம் நடத்தினோம்.''

சங்கர் காற்றில் அடித்துச் செல்லும் மணலைப் பார்த்துக் கொண்டே இருந்தான். அவர்களின் இரண்டு புறத்திலும் ஊர் சரிந்திருந்தது. காற்று சப்தமிடத் தொடங்கியது. சங்கர் ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக்கொண்டான். சிகரெட்

புகையோடு அவன் கவிதையைச் சொல்லத் தொடங்கினான். மூவரும் கேட்டுக்கொண்டு இருந்தனர். சின்னக் கவிதையது. அவன் சொல்லி முடித்ததும் தாஸ் அவனிடம் சொன்னார்.

''காற்றில் கரைந்த கவிதை''

நீண்ட மௌனம் படர்ந்தது. அவர்கள் பேசிக்கொள்ளாமல் இருந்தார்கள். காற்று புலம்புவது போல அலைந்தது. ஊரின் தோற்றம் மங்கித் தெரியத் தொடங்கியதும் அவர்கள் ரெங்க சாமியின் வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினர். அவர்கள் ஊரினுள் நுழையும்போதே விபரம் தெரிந்துவிட்டது. தாஸும், ரெங்கசாமியும் பெரிய பாதக்காரனின் தொங்கும் உடலைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பச்சை குத்தப்பட்ட உடலில் இருந்த பெண் உருக்கள் மங்கியிருந்தன. அவ்வளவு பெரிய பாதம் பயத்தைப் பெருக்கியது. உடலைக் கீழே இறக்கினார்கள். முகத்தின் விகாரமும், உடல் அமைப்பும் எவராலும் அருகில் நிற்க முடியாமல் செய்தது.

தரையில் உடலைக் கிடத்தினார்கள். தரையெங்கும் மூத்திர வாடை படிந்துபோயிருந்தது. சிறுமிகள் பலர் பயந்த கண்க ளோடு உடலைப் பார்த்தபடி நின்றனர். உடலைக் கிடத்திவிட்டு வெளியே வந்து நின்றுகொண்டனர். யாரும் அழவில்லை. எல்லோரும் வீடுகளுக்குள் அடங்கி, பேச்சற்று இருந்தனர்.

பெரிய பாதக்காரனின் வீட்டினுள் சிம்னி விளக்கைப் பொருத்தி வைத்தார்கள். அந்த ஒளியில் வீடு வேறு தோற்றம் கொண்டது. இரவில் அந்த வீட்டின் வெளியே அவர்கள் நால்வரும் கட்டில் போட்டு உட்கார்ந்திருந்தனர். அத்தனை கறுப்பான இருட்டு. அன்று நள்ளிரவில் சங்கர் அந்த உடலை நெருக்கமாகப் பார்த்தான். வெடித்த பாறை போல முகம் - சில நிமிடங்களுக்கு மேல் பார்க்க முடியவில்லை. அவன் திரும்பும்போது வீட்டிலிருந்து ஒரு தவளைதான் தெருவில் குதித்தது.

அடுத்த நாளின் பகல், சாம்பல் படர்ந்தது போல வந்தது. வெயில் வராத நாள். மூடிய மேகத்தோடு காற்று அடங்கியிருந்தது. அந்த உடலைப் புதைப்பதற்காக ஊரை விட்டு வெளியே எடுத்துச் சென்றனர். சாம்பல் படர்ந்த காலையில் ஊரின் புறவெளி இதுவரை யாரும் பார்த்தறியாத வசீகரத்துடன் இருந்தது. எல்லாப்புறமும் வெற்று நிலப்பரப்பு. இத்தனை வசீகரத்தையும்

காணாது அந்த உடல் கடந்துபோனது. அவனை வெகு தள்ளிப் புதைத்து வந்தார்கள். அன்றெல்லாம் வெயில் வரவில்லை. ஊரே பயத்தின் பிடியில் அகப்பட்டது போலாகியது. சங்கர் அன்று முழுவதும் சாப்பிடவில்லை. தாஸ் புறப்பட்டுப் போய்விட்டார்.

ஊரின் வீதிகளில் அலைந்தான். ஒரு ஆட்டுக்குட்டியைக் கூடச் சந்திக்க முடியவில்லை. மாலையானபோது இனிமேலும் இந்த ஊரில் இருக்க முடியாது என அவனுக்குப் பட்டது. அலைக் கழிப்பின் தீவிரக் கோடுகள் எல்லாச் சுவர்களிலும் கீறப் பட்டிருப்பதாக உணர்ந்தான். ரெங்கசாமியும் அப்புவும் திரும்பவும் எதையோ பேசிக்கொண்டிருந்தார்கள். சங்கர் அவர்கள் எதிரில் வந்து சொன்னான்.

''நான் கிளம்புறேன்...''

''எங்க போற... திடீர்னு என்ன?''

''இல்லை, கிளம்புறேன்.''

அப்பு அவனிடம் எதுவோ கேட்க நினைத்தான். சங்கர் தனது பையை எடுத்துக்கொண்டு வந்தான். ரெங்கசாமி அவனிடம் எதுவும் கேட்கவில்லை. அப்பு அவனிடம் சொன்னான்.

''நான் அடுத்த வாரம் வர்றேன்.''

கிளம்பி அவன் நடக்கத் தொடங்கியபோது காற்று எழுந்திருந் தது. மணலை வாரிச் சுழற்றியது. பூதாகரமான நிலப்பரப்பில் புதையுண்டிருந்தது பெரிய பாதக்காரனின் உடல். மணலை வாரியவாறே காற்று சங்கர் பஸ் ஏறும் பாதை வரை சுழன்று வந்தது. அவன் பஸ்ஸில் ஏறியபோது மழையின் முதல் தூறல் பட்டது. கண்களை மூடிக்கொண்டான். ஆள் அற்ற பரப்பில், நீரில் மிதந்துகொண்டிருந்தது உடல். மூழ்கிப்போயிருந்தது கிராமம். கண்களைத் திறந்தான். எதுவும் இல்லை. வேகமும், சப்தமும் ஆன நகர் உலகம் இடைவிடாது இயங்கியபடியே இருந்தது. அவன் முகத்தில் புகைக்கரி வந்து படியத் தொடங்கியது.